

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவ நாமாவளி.

விக்னேஸ்வரர் காப்பு.

நேரிசை வெண்பா.

தெய்வத்திருநீற்றுச் செந்நெறியைத்தாபித்திங்
குய்வகைநங்கட்கருளு மோர்நால்வர்-மெய்வருசீர்
நாமாவளியுரைத்து நன்றகரத்தந்திமுகக்
கோமான்றிருவருளைக் கொண்டு.

## கணேசர் நாமாவளி.

கஜமுகசுந்தர கணபதியே
கதியருள்மங்கள குணநிதியே (௧)

பாசாங்குசதர பவநாசா
பணிபூஷணசுத ஜகதீசா (௨)

மூஷிகவாஹன முன்னவனே
முத்திநலந்தரு மன்னவனே (௩)

பிரணவப்பொருளே பெம்மானே
பிழைபொறுத்தாண்டரு ளெம்மானே (௪)

ஒற்றைமருப்புடை யுமைசுதனே
உம்பர்கள்தொழுபங் கயபதனே (௫)

ஐங்கரத்தோனே யாரணனே
அகிலபுவிக்கொரு காரணனே (௬)

வல்லபைமகிழுறு மணவாளா
மாசறுமங்கள சுகுணாளா (எ)
அம்பிகைதந்தரு ளருமருந்தே
அடியவர்க்குதவருட் பெருவிருந்தே (அ)
அத்திமுகத்தெம தாண்டவனே
அருளாபரணம் பூண்டவனே (கூ)
விக்னவிநாயக மெய்க்குருவே
வேட்டவைதந்தரு ளீந்தருவே (கo)
கௌரிபயந்தருள் கற்பகமே
கவலையொழித்தருள் சிற்சுகமே (கக)
சிற்பரனுதவுசி வக்கன்றே
தேசவிஞ்ஞான குணக்குன்றே. (கஉ)

சித்திபுத்திதேவிமார்கள் சிந்தைமகிழுநாதனே
தினமுமன்பர்பரவிவாழ்த்துஞ் செய்யகமலபாதனே (க)
அயனுமாலுமமரர்யாரு மகிசமேத்துமாதியே
அகிலசுரர்க்குமுன்னர்பூஜை யடையுமெங்கள்சோதியே(உ)
அடியைப்பரவுமன்பர்வேண்டு மனைத்துமுதவவல்லவா
அன்பனிங்குபாலருந்து மன்னைதனிலுநல்லவா (ங)
கலசமுனியின்கரகநீரைக் கவிழ்த்தகருணைவாரியே
கவலையொழித்துமகபதிக்குக் கருணைசெயுபகாரியே (ச)
இகபரங்களிரண்டிற்செல்வ மேத்துநர்க்களிப்பவா
என்றுமன்பரின்பமெய்தி யிருப்பக்கண்டுகளிப்பவா. (ரு)

# சண்முகக்கடவுள் நாமாவளி.

சிவகுருவே சிவகுருவே
திருவருள்புரியுமோர் சுரதருவே (க)
உமைமகனே ஒளிர்குகனே
உலகினைவலம்வரு மறுமுகனே (உ)
அருணிதியே யதிபதியே
அன்புடன்வந்தரு ளிதுததியே (ங)
உருவருவே அருவுருவே
உளதிலதெனவளர் மலர்மருவே (ச)
சுகநயனே மிகுசயனே
சுரகரிமருவுப னிருபுயனே (ரு)
குருமணியே திருமணியே
குறமகள்மருவுறு மொருமணியே (சு)
நாயகனே நேயகனே
நல்லுயிர்களுக் கொருநாயகனே (எ)
ஆரியனே சீரியனே
அல்லவிருட்கொரு சூரியனே (அ)
வாகனே யோகனே
வள்ளிதெய்வானை மகிழ்மோகனே (கூ)
வேலனே சீலனே
வெவ்வசுரர்கள்குல காலனே (க0)
தீரனே வீரனே
திகழ்மரகத மாயூரனே (கக)
மூலனே கோலனே
முக்கணனருளிய பாலனே. (கஉ)

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நடேசர் நாமாவளி.

நடராஜமணியே நன்மணியே
ஞானச்சுடர்தரு விண்மணியே (க)

சிவகாமசுந்தரி மணவாளா
சிற்பரமூர்த்தி யருளாளா (உ)

கனகசபேசா கைலாசா
அனகவிரஞ்சன வகிலேசா (ங)

சிற்சபைநடமிடு சிவலோகா
சின்மயரூபா வதியோகா (ச)

குஞ்சிதபாதா குணநிதா
கோதையிடத்திற் கொளுநாதா (ரு)

ஆணிப்பொன்னம்பலத் தாண்டவனே
அடியவருளத்துறை யாண்டவனே (சா)

நடராஜனே நங்குலதெய்வம்
நாமவனடியிணை தொழுதுய்வம் (எ)

தூக்கியதிருவடி கண்டாரோ
துயர்கருவெம்பவ மண்டாரோ (அ)

சிதம்பரங்கண்டவர் ஜகமீதே
திரும்பிப்பிறவார் நிஜமீதே (சு)

நடராஜனடிமலர் நாடுதுமே
நாடிநாடிமுடி சூடுதுமே (க0)

நடராஜவெனில் நமன்தூதுவரோ
நணுகார்வணங்கிப் போதுவரோ (கக)

பொன்னம்பலத்தமர் புண்ணியனே
புவனமெலாந்தொழு கண்ணியனே (௧௨)
தில்லைப்பொன்னம்பலத் திருநடராஜா
தேவாதிகம்பர சின்மயதேஜா (௧௩)
ஆடியபாத சதானந்தபோதா
ஆரணந்தேடி யறியாதபாதா (௧௪)
வாக்குமனத்தில் மதுரிக்குந்தேனே
வந்தடைந்தோர்களைக் காத்தருள்கோனே (௧௫)
நடராஜனல்லாமல் தெய்வம்வேறிலையே
நம்பினவர்க்குண்டு மெய்முத்திநிலையே (௧௬)
நடராஜன்சிவகாமி நமக்கப்பனம்மையே
நாளுந்துதித்தேத்த லெங்கடமையே (௧௭)
நடராஜன்புகழ்பேசும் நாள்திருநாளே
நலம்பெறவோதாத நாள்வெறுநாளே (௧௮)
மாதேவனடியிணை வணங்காததலையே
மாநிலத்தாரு மறியாதசிலையே (௧௯)
கனகசபேசனைக் காணாதகண்ணே
காசினிமேன்முகத் திற்பெரும்புண்ணே (௨0)
வேணியரன்கதை வினவாதகாதே
வெறுந்துளையல்லது விளம்புவதேதே (௨௧)
சோதியினுலயஞ் சூழாதகாலே
தோற்றுமுலகளக் கச்செய்தகோலே (௨௨)
பசுபதிதாளே நீபாவிப்பாய்மனமே
பாசநமன்வந்து பற்றிடுமுனமே (௨௩)

சிவமயம்.

# சிவகாமியம்மன் நாமாவளி.

தேவியே எனதாவியே
தீவினைக்கொரு சஞ்சீவியே (க)
வாமியே சிவகாமியே
வடிவுடைய வபிராமியே (உ)
ஆரணியே பரிபூரணியே
அகிலாண்டமுந்தரும் காரணியே (ங)
நாரியே சுகுமாரியே
நல்வரந்தரு முபகாரியே (ச)
மாதரியேயரி சோதரியே
வந்தடியேங்களை யாதரியே (ரு)
பெண்மணியேயருள் விண்மணியே
பிறங்கலரசனிரு கண்மணியே (சா)
அந்தரியே சிவசுந்தரியே
அரனொடமர்ந்த துரந்தரியே (எ)
வந்தருளேயுளு வந்தருளே
வரங்கணினைத்தபடி தந்தருளே. (அ)

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சைவசமயாசாரியராகிய

# திருநாவுக்கரசுசுவாமிகள் சரித்திர

# நாமாவளி.

வாகீசமுனியே மாதவமணியே
போகீசசயனனும் போற்றுங்கண்மணியே (க)

தசமுகனுக்கருள் சாற்றுந்தயாளா
தஞ்சமடைந்தோரைத் தாங்குங்குணாளா (உ)

புகழனார்தவத்தினிற் போந்தருள்பாலா
புண்ணியநீற்றொளி பொலியருட்கோலா (ங)

மாதினியார்பெற்ற மாதவவடிவே
மேதினியோர்க்கருள் மேன்முத்திமுடிவே (ச)

திலதவதிக்குப்பின் வந்தசிரோனே
உலகந்தொழும்புகழ் ஓங்கும்பேரோனே (ரு)

சூலைநோயாலரன் தொண்டுகொண்டோனே
மேலைப்பரம்பொருள் மெய்மைகண்டோனே (சு)

ஈனச்சமண்குழி யேறியதூயா
ஞானப்பரஞ்சுடர் நல்லருணேயா (எ)

சைவத்திருவேடந் தாங்கியமெய்யா
உய்யும்வழியெமக் குற்றருள்செய்யாய் (அ)

நாவுக்கரசே மெய்ஞ்ஞானவரசே
பாவுக்கரசே மெய்ப்பக்தியரசே (கூ)

நாங்குடியன்றென்று நாட்டுங்கம்பிரா
ஆங்கரசன்றனை யஞ்சாததீரா (௧௦)

நீற்றறையிற்சுகம் நீடும்பிரதாபா
போற்றுஞ்சைவத்தொரு பொங்கொளிதீபா (௧௧)

நஞ்சமுதாக நயந்துண்டநாதா
வெஞ்சமன்றீமை விலங்குமெய்ப்போதா (௧௨)

ஈசன்தமர்க்கிடர் யாண்டுமில்லென்றே
காசனியுள்ளோர்க்குக் காட்டருட்குன்றே (௧௩)

வெஞ்சமணர்விடு வேழம்வென்றோனே
நெஞ்சிலன்பென்றும் நிலைத்துநின்றோனே (௧௪)

கற்புணையாக்கடல் கடந்தபெம்மானே
சொற்றுணைப்பாசுரந் துதித்தெழுகோனே (௧௫)

தூங்கானைமாடச் சுயம்புவினாலே
சூலவிடைக்குறி தோய்ந்தருண்மாலே (௧௬)

சோதியடிமுடி சூட்டப்பெற்றோனே
ஆதிக்குடல்பொரு ளாவிவிற்றோனே (௧௭)

பாம்பதுதீண்டிய பாலகன்வீந்தே
பாங்கினெழத்தமிழ் பாடியவேந்தே (௧௮)

பாடுந்தமிழ்க்குப் பரிசெனமுன்னே
நீடும்படிக்காசு நேர்பெறுமன்னே (௧௯)

வேதக்கபாடந் திறக்கும்விநோதா
விண்ணவரேத்தி விழுந்தெழுபாதா (௨௦)

பயிலுமையாற்றிற் பரஞ்சுடர்மூர்த்தி
கயிலாயக்காட்சியைக் கண்டருண்மூர்த்தி (௨௧)

அன்பேதிரண்டொருங் கானவுருவே
உன்பாதமேசர ணுற்றேன்குருவே (௨௨)

உழவாரநற்படை யோங்கியகையா
உத்தமசீலத்தி லோங்கியமெய்யா (உங)
வாக்கொடுமெய்த்தொண்டுவாய்ப்பச்செய்தோனே
நீக்குணத்துச்சமண் றீமைகொய்தோனே (உச)
தாண்டகமாரி சதாபொழிந்தோனே
ஈண்டுளவாசை யெலாமொழிந்தோனே (உரு)
ஓடுஞ்செம்பொன்னு மொன்றாகக்கண்டோனே
தேடுஞ்சிவாநந்தந் தேக்கவுண்டோனே (உசா)
திண்மணியுங்கல்லுஞ் சேர்த்தெறிந்தோனே
சிவனேயெல்லாமெனத்தேர்ந்தறிந்தோனே (உஎ)
தோகையரைத் துரும்பாவெறுத்தோனே
தொண்டுளங்கொண்டு தூகளறுத்தோனே (உஅ)
தேவாதிதேவன் சிவனடியொன்றே
மூவாதவாழ்வென முந்தருட்குன்றே (உகூ)
நித்தன் திருவடி நீழலுற்றோனே
நீங்காப்பரானந்த நீடப்பெற்றோனே (௩௦)

வேறு.

நாவுக்கரசடி நாடுவமே
ஞாலத்தவன்புகழ் பாடுவமே (க)
தாண்டகவேந்தடி தலையணியே
சந்ததம்பூண்பது நம்பணியே (உ)
நாவேந்தடியைப் பணிவாமே
நமனைவெருட்டத் துணிவாமே (௩)
அப்பர்திருத்தமிழ் பாடுவமே
ஆனந்தக்கட லாடுவமே (ச)
பவநோய்க்கொருபெரு மருந்தாமே
பரலோகத்து விருந்தாமே (ரு)

பரசமயக்குழி யேற்றிடுமே
பந்தமெல்லாமற மாற்றிடுமே (சு)
நஞ்சமுதாகச் செய்திடுமே
நந்துகள்யாவுங் கொய்திடுமே (எ)
மாற்றலர்தாமு மஞ்சுவரோ
சிற்றமொடுங்கி யிறைஞ்சுவரோ (அ)
உள்ளத்திருளை யொழித்திடுமே
கள்ளத்தொழிலை யழித்திடுமே (கூ)
சங்கரனடிக்கா ளாக்கிடுமே
தத்போதத்தைப் போக்கிடுமே (க0)
திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடிவாழ்க.
முற்றிற்று.

---

உ
சிவமயம்.

# திருஞானசம்பந்தசுவாமிகள் சரித்திர

# நாமாவளி.

பல்லவி.

ஞானசம்பந்த தயாநிதியே
நாளுமகிழ்ந்தருள் வாய்கதியே

க. சீகாழிதனில்வந்த விண்மணியே
சிவபாதவிருதயர் கண்மணியே (ஞான)

உ. பண்புறுகவுணிய குலமதியே
பகவதியார்தரு குணநிதியே (ஞான)

ங. மால்விடைமேலரன் றருங்காட்சி
மாதுமையுடன்கண் டதுகடாட்சி (ஞான)

ச. பார்பதிபாலுடன் வித்தகமே
பருகிமகிழ்ந்திடுங் கற்பகமே (ஞான)

ரு. தோடுடையசெவிய னிவனென்றே
சுட்டிப்பதிகம்பாடுங் குணக்குன்றே (ஞான)

சு. பொற்றாளங்கரங்கொண்ட புண்ணியமே
புங்கவர்புகழ்சுப்பிர மண்ணியமே (ஞான)

எ. முத்துச்சிவிகைமுதல் பெறுஞ்சதிரோ
முத்தலமெங்குமகிழ் தருங்கதிரோ (ஞான)

அ. கலைகளோதாதுணர் பெருவாழ்வே
கழலடைந்தவர்களுக் கிலைதாழ்வே (ஞான)

கூ. கொல்லிமழவன்மகள் கொடுவியாதி
குமரகண்டந்தொலைத்த வருட்சோதி (ஞான)

கO. சந்தத்தமிழ்க் கிரங்கியுமாபதி
தந்தப்பொன்றந்தைக் கருள்பயோததி (ஞான)

கக. யாழ்மூரிபாடிய நாயகமே
யாவருமகிழ்ந்திடுந் தாயகமே (ஞான)

கஉ. மருகலில்விடந்தீர்த்த வருமருந்தே
வணிகற்குமணஞ்செய்த சிறுகுருந்தே (ஞான)

கங. வாகிசருடன்மகிழ் செங்கரும்பே
மகிழ்ந்துமைவணங்கிலர் மனமிரும்பே (ஞான)

கச. வீழிமிழலையுறு மாதவமே
மிளிர்பொற்காசு பெறுசிவமே (ஞான)

கரு. மறைக்காட்டிற்கத வடைத்திடுஞ்சேயே
வணங்கினர்க்கருள் புரியுந்தாயே (ஞான)

கசு. மங்கையர்க்கரசியர் மகிழ்மதியே
வந்தெமையாண்டரு ளிதுததியே (ஞான)

கஎ. பாண்டியன்சுரந்தீர்த்த மந்திரமே
பகருதற்கெவரு ளருந்திரமே (ஞான)

கஅ. எடெரியாதன விடுங்கோவே
எடெதிருறப்புன விடுந்தேவே (ஞான)

கக. சமணரைக்கழுவிடும் பெரும்பகையே
சார்ந்தவர்க்களித்திடும் பெருந்தகையே (ஞான)

உ0. புத்தன்தலையிடற வருஞ்சுடரோ
புகழ்ந்துமையடைந்தவர்க் கிலையிடரோ (ஞான)

உக. ஆண்பனைகாய்க்கச் செயருள்வடிவே
அருந்தவர்புகழ்ந்திடு மறைமுடிவே (ஞான)

உஉ. என்பைப்பெண்ணாக்கிய மூலிகையே
இசைந்தடியார்தொழு மாண்டகையே (ஞான)

உங. நல்லூர்ப்பெருமணத் தாலயமே
நயந்தன்பர்க்கருள் மனோலயமே (ஞான)

உச. உரைக்கும்பரசமய கோளரியே
உவந்தெமையனுதின மாதரியே (ஞான)

உரு. சைவப்பயிர்தழையப் பொழிபுயலே
தங்குமப்பயிருக்குப் பெருவயலே (ஞான)

உசு. நினைத்ததையளித்திடு மைந்தருவே
நினைப்பதற்கரியவோ ரெங்குருவே (ஞான)

உஎ. அளவுபடாவருட் சாகரமே
யடியவர்தமக்கு மனோகரமே (ஞான)

உஅ. சந்ததமன்பர்கள் தாமுயவே
சற்குணனுங்கழல் வாழியவே (ஞான)

ஸ்ரீஞானசம்பந்தகுரவேநம.

வே று.

ஞானசம்பந்தனைத் துதிப்போமே
நந்திவினைத்தலை மிதிப்போமே. (க)

காழியில்வந்தருள் கற்பகமே
கடைக்கண்பார்த்தருள் சிற்சுகமே (உ)

சம்பந்தநாமச் சற்குருவே
தந்தருள்ஞான நற்றிருவே (ங)

ஞானசம்பந்த னம்மாரியனே
ஞானநலந்தரு சீரியனே (ச)

திருஞானசம்பந்த தேசிகமணியே
சிவசமயத்தோர்க்குத் திகழுங்கண்மணியே (ரு)

பொற்றாளங்கைக்கொண்ட புண்ணியவுருவே
பொன்னடியேயெங்கள் புரையற்றதிருவே (சு)

சம்பந்தனென்னுஞ் சதாரியனே
நம்பந்தவிருள்தெறுஞ் சூரியனே. (எ)

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திர நாமாவளி.

சுந்தரநாம சுகானந்தபோதா
வந்தருள்செந்தா மரைமலர்ப்பாதா

க. வெள்ளிமலையினில் வீற்றிருப்போனே
வள்ளல்பணியில் மனம்விருப்போனே (சுந்)

உ. நாரிபாகன்திருநல்லருள் பெற்றோய்
பாரிற்றிருமுனைப் பாடிநாடுற்றோய் (சுந்)

௩. தெய்வத்திருநாவ லூரினிலாதி
சைவர்மரபிற் சனித்தப்ரக்யாதி (சுந்)

௪. சதுராரணுதி சதிராகக்கற்றோய்
மகராஜனேத்தும் வடிவமுமுற்றோய் (சுந்)

௫. சடங்கவிமகன்மணஞ் சார்ந்திடக்கனந்தோய்
சடங்கினிலரன்வந்து தடுத்திடச்சினந்தோய் (சுந்)

௬. பித்தனென்றீசனைப் பேசிப்பழித்தோய்
பத்திரவாளோலைப் பற்றிக்கிழித்தோய் (சுந்)

௭. கத்தனசலோலை காட்டவேநன்றாய்
சித்தந்தெளிந்தேவல் செய்யப்பின்சென்றாய் (சுந்)

௮. அருட்டுறையானென் றயர்ந்தங்கழுதாய்
கருத்தன்மெய்க்காக்ஷியைக் கண்டுதொழுதாய் (சுந்)

௯. வன்றெண்டநாமம் வனைந்துக்கொள்பற்றோய
அன்றேபித்தவென் றருந்தமிழ்ச்சொற்றோய் (சுந்)

௧0. இப்படியேதல மெங்கும்பாடென்று
அப்பனுரைத்திட வாசைகொண்மன்று (சுந்)

௧௧. திருத்துறையூர்த்தெரி சித்தகுணாளா
பெருத்திடுதவநெறி பெற்றதயாளா (சுந்)

௧௨. சித்தவடமடத்திற்கண் வளர்ந்தாய்
முத்தன்பதத்தை முடித்துக்கிளர்ந்தாய் (சுந்)

௧௩. தம்மானையறியாத சாதியென்றெடுத்தோய்
இம்மாநிலங்காண வின்றமிழ்தொடுத்தோய் (சுந்)

௧௪. தில்லைச்சிற்றம்பலந் தெரிசித்தநாதா
எல்லையிலானந்த மெய்தியபீதா (சுந்)

௧௫. ஆரூர்க்குவாவென் றரனசரீரி
கீரூறச்சிந்தை கிளர்சுகவாரி (சுந்)

கசு. வாகார்சம்பந்தர் வருதலமென்றே
சீர்காழியைவலஞ் செய்குணக்குன்றே (சுந்)

கஎ. எம்பிரானருளா லெய்தியதிரா
தம்பிரான்தோழப்பேரூர் தாங்குங்கெம்பீரா (சுந்)

கஅ. நாளுந்திருவாரூர் நம்பனையேத்தி
ஆளுந்தொண்டரோ டமர்ந்தருண்மூர்த்தி (சுந்)

கக. பரவையாரெழினலம் பார்த்துற்றமோகா
பரமனருளென்று பாடும்விவேகா (சுந்)

உ0. நாதனருட்சொப்பனங் கண்டதூயா
மார்தபரவை மணங்கொண்டநேயா (சுந்)

உக. தில்லைவாழந்தண ரெனப்பரசிவனே
திருவாய்மலர்ந்தடி கொடுக்கப்பெற்றவனே (சுந்)

உஉ. திருத்தொண்டதொகைபாடிச் சேவித்தவெந்தாய்
திருத்தொண்டர்நாப்பண் சிறப்பொடுறைந்தாய்(சு)

உங. குண்டையூர்நெல்வரக் கோளிலிப்புகழ்ந்தோய்
அண்டர்சேராரூ ரமர்ந்துதிகழ்ந்தோய் (சுந)

உச. தண்கோட்புலியன்பர் தந்திடநயந்தோய்
பெண்களைப்பெற்றிடும்பெண்களாய்வியந்தோய்(சு)

உரு. திருப்புகலூர்பாடிச் செங்கல்லைப்பொன்னாய்
விருப்பொடுபெற்று விளங்கியவன்னாய் (சுந்)

உசா. திருப்பணையூராதி சேவித்துக்கீர்த்தி
விருத்தாசலத்தை விழைந்தமெய்ப்பூர்த்தி (சுந்)

உஎ. பன்னிரண்டாயிரம் பொன்பெறயோகா
மன்னுமுத்தாநதியின் விட்டத்யாகா (சுந்)

உஅ. திருத்தில்லையாதிய சேவித்தடுத்தாய்
திருவாரூர்வாவியிற் செம்பொனெடுத்தாய் (சுந்)

உகூ. இட்டமாக்குருகாவூ ரெய்தியதேவே
கட்டமுதியக் களித்துண்டகோவே (சுந்)

௩௦. கச்சூரன்றரும் பிச்சானமுண்டாய்
பிச்சாடனன்செயல் மெச்சியேகண்டாய் (சுந்)

௩க. அன்பாகக்காஞ்சியே காம்பரமாதி
இன்பாயங்கார்தல மேத்தியசோதி (சுந்)

௩உ. உன்னுந்திருவொற்றி யூரைமதித்தாய்
பன்னும்படம்பக்கர் பாதந்துதித்தாய் (சுந்)

௩௩. அடிமைசெய்சங்கிலி யாரெழில்கண்டோய்
கடிமணஞ்செய்யுங் கருத்ததுகொண்டோய் (சுந்)

௩௪. மகிழடியினிற்பர வசஞ்செய்துதந்தோய்
மகிழுஞ்சங்கிலியாரை மணஞ்செய்துகந்தோய் (சுந்)

௩௫. ஆரூருக்கேகாசை யாலடியொடுத்தோய்
காருறுங்கண்டார்க்குக் கண்களைக்கொடுத்தோய் ()

௩௬. காஞ்சியைப்பாடியோர் கண்பெற்றுக்கொண்டோய்
வாஞ்சித்தாரூரினில் மற்றைக்கண்கண்டோய் (சுந்)

௩எ. பரமனைத்தூதாக விரவினில்விட்டோய்
பாவையாரின்பப் பரவையுட்பட்டோய் (சுந்)

௩அ. ஏயர்கோன்கலிக்காம நாயனார்ச்சேர்ந்தோய்
தூயனருளாலே நேயங்கொண்டார்ந்தோய் (சுந்)

௩கூ. சேரமான்பெருமானுஞ் சேரவிருந்தே
ஆரூர்சிலநா ளமர்ந்தமருந்தே (சுந்)

௪௦. தேவிபங்காளனைத் தேர்ந்தசுகுண
காவிரியாற்றைக் கடந்தநிபுண (சுந்)

௪க. முருகன்பூண்டீசர் சின்றமிழ்தொடுத்தாய்
திருடர்கொள்பொன்னைச் சிகரிவாயெடுத்தாய் (சுந்)

சஉ. மதலையணிந்த முதலைநினைந்தாய்
முதலைவிழுங்கின மதலையைத்தந்தாய் (சுந்)

சங. வந்துவஞ்சைக்கள வள்ளறற்பரிந்தோய்
பந்தத்தொடக்கறப் பாடல்புரிந்தோய் (சுந்)

சச. அத்தனருளால் வெள்ளானையையூர்ந்தோய்
பத்தர்சூழ்வெள்ளிப் பருபதஞ்சேர்ந்தோய் (சுந்)

சரு. எங்களையாண்டரு ளெம்பெருமானே
மங்களம் மங்களம் வாழிநற்கோனே (சுந்)

வேறு.

திருத்தொண்டத் தொகையருள்திருவாயா
திசைமுழுதும்புகழ் திகழ்தூயா (க)

முத்திவழிக்கொரு கண்மணியே
மூலவிருட்கொரு விண்மணியே (உ)

சிவனைப்பெண்பால்தூது செலவிடுத்தோனே
செந்தமிழ்வேதத் தொடைதொடுத்தோனே (ங)

தம்பிரான்றோழ னெனும்பெருந்தவனே
சைவத்தவக்கோலந் தாங்குமன்னவனே (ச)

வன்றொண்டநாமம் வழங்கக்கொண்டோனே
மன்னுஞ்சிவானந்த மதுவையுண்டோனே (ரு)

ஆலாலசுந்தர வானந்தபோதா
காலாந்தகனிலை கண்டருள்நாதா. (சா)

ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவடி வாழ்க.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திர நாமாவளி.

வாதவூர்வந்தருண் மாதவமே
வாழ்வென்றடைந்தவர்க் கேதவமே (க)

மாணிக்கவாசக மாமணியே
மாதவத்தோர்கள் சிகாமணியே (உ)

தேசிகமணியே திருமணியே
மாசறுமணியே மனமணியே (௩)

தவவேடத்துச் சற்குருவே
சைவநற்குருவே யெந்திருவே (௪)

அன்புருவேயெம தாரியனே
அகவிருள்போக்கிடு சூரியனே (௫)

வேதாகமமுழு துணர்ந்தோனே
நீதானவையுளந் தணந்தோனே (௬)

மந்திரிக்கிழமை பூண்டோனே
மனஞ்சிவத்தேயுற வாண்டோனே (௭)

சங்கரகுருவடி சார்ந்தோனே
தத்துவஞானந் தேர்ந்தோனே (௮)

குருந்தடிகுருமொழி பெற்றோனே
குவலயப்பொய்வாழ் வற்றோனே (௯)

திருப்பெருந்துறையை யடுத்தோனே
கருப்பெருந்துறையை விடுத்தோனே (௧௦)

சத்திநிபாதத் துத்தமனே
சத்துவகுணனே சத்தமனே (கக)

உடல்பொருளாவி யளித்தோனே
ஓங்குசுகத்திற் களித்தோனே (கஉ)

ஐந்தெழுத்துண்மை யறிந்தோனே
ஐம்புலக்காட்டை யெறிந்தோனே (கரு)

ஆனந்தக்கட லாழ்ந்தோனே
ஐயனடித்துணை தாழ்ந்தோனே (கச)

சிவதிருப்பணியே களித்தோனே
செழியன்பொருளை யளித்தோனே (கரு)

திருவாசகமொழி திருவாயா
சிவனடியேதொழு முயர்நேயா (கசா)

சிவமணத்தேன்றிகழ் செவ்வாயா
சித்தந்தெளிதரு நனிதூயா (கஎ)

வைதிகசைவம் வளர்த்தோனே
மெய்திகழ்ஞான வுளத்தோனே (கஅ)

உள்ளத்திருள்தெறு மாதவனே
உயர்தருஞான மாதவனே (ககூ)

நரிபரியாக்கப் பெற்றோனே
நம்பனருட்பாங் குற்றோனே (உ0)

வைகைபெருக்குற வைத்தவனே
மாசறுநெஞ்சின் மெய்த்தவனே (உக)

சம்புவையடிமை யாக்கியவா
தனிமதுரைத்தெருப் போக்கியவா (உஉ)

கூலிக்கிப்பிட் டருத்தியவா
கூடைத்தலையிற் பொருத்தியவா (உரு)

முன்னோன்முடிமண் ணேற்றியவா
முத்திக்குறுநெறி சாற்றியவா (உச)

அற்புதமூர்த்தி யருளாளா
அன்புருவேயதி சுகுணாளா (உரு)

பிரம்படியேற்றிடப் பெம்மானே
பீடுறுமன்பு செபெம்மானே (உசா)

உலகமெலாந்தொழ வோங்கியவா
உயர்தவக்கோலந் தாங்கியவா (உஎ)

பாண்டியனுய்யக் கொண்டவனே
பரகதிக்காளாக் கண்டவனே (உஅ)

கழுக்குன்றிற்குருக் கோலமதே
கண்டுகளித்தரு ளாரமுதே (உகூ)

சிவயோகத்தி லிருந்தவனே
சித்தந்திருந்தப் பெருந்தவனே (௩0)

புத்தனைவென்றருள் புண்ணியனே
புகழ்பெறுநின்மல கண்ணியனே (௩க)

புத்தனைச்சைவஞ் சேர்த்தோனே
பொங்குமனத்திருள் தீர்த்தோனே (௩உ)

சிவசாதனவழி நிறுத்தினவா
சிதம்பரமென்ற றிவுறுத்தினவா (௩௩)

மூகைமொழிந்திடச் செய்தோனே
மூலமலத்தொடர் கொய்தோனே (௩ச)

திருவாசகமதை முன்னோனே
செங்கையிலெழுதச் சொன்னோனே (௩௫)

பாவையுடன்சொற் படியன்றே
கோவையுரைத்த குணக்குன்றே (௩சா)

தேனூறியதிரு வாயானே
நானூறருளிய தூயோனே (௩எ)
புகழ்வாசகமறை வாக்கியனே
பொற்சபையேற்றிய பாக்கியனே (௩அ)
பேரானந்தப் பெருவாழ்வே
பெற்றுநிலைந்தரு ளெம்வாழ்வே (௩கூ)

வேறு.

மாணிக்கவாசகர் மலரடியே
மாசறநந்தலைக் கணிமுடியே (௪0)
திருவாசகமே மெய்வேதம்
சித்தங்களைத்தரு ணற்போதம் (௪க)
கல்லையுமுருக்க வல்லதுவே
கதிவழிசேர்க்க நல்லதுவே (௪உ)
திருவாசகத்துக் குருகாரே
ஒருவாசகத்துக் குருகாரே (௪௩)
முத்திவழிக்கொரு நற்றுணையே
மோதுபவாம்புதிக் கோர்புணையே (௪௪)
என்னையுருக்கும் பாட்டதுவே
இதுபோலுலகில் வேறெதுவே (௪௫)
பவநோய்க்கொருபெரு மருந்தாமே
பரலோகத்து விருந்தாமே. (௪௬)

ஸ்ரீமந் மாணிக்கவாசகசுவாமிகள் திருவடிவாழ்க.

### வெண்பா.

சொற்கோவுந்தோணிபுரத் தோன்றலுநஞ்சுந்தரனுஞ்
சிற்கோலவாதவூர்த் தேசிகனும்-முற்கோலி
வந்திலரேல்நீறெங்கே மாமறைநூலெங்கே
எந்தைபிரானைந்தெழுத் தெங்கே.

வாகீசசம்பந்த மாதவகுருவே
வன்றொண்டவாதவூர் வந்தருள்திருவே (க)
நால்வர்திருப்பணி செய்வோமே
நங்கள்பிறப்பறுத் துய்வோமே (உ)
நால்வர்திருப்பங்கயவடியே
நலமுறநந்தலைக் கணிமுடியே. (ங)

நால்வர் திருவடிவாழ்க.

முற்றிற்று.

---

## வாழி விருத்தம்.

சீர்மேவும்பார்பதியார் திருமுலைப்பாலுண்ட
திருஞானசம்பந்தர் திருவடிகள்வாழி
நீர்மேல்கன்மிதப்பித்த வப்பரடிவாழி
நிமலனைத்தூதாய்விடுத்த நேசரடிவாழி
வார்மேவும்பெருந்துறையில் வள்ளலருள்பெற்ற
மாணிக்கவாசகர்த மலரடிகள்வாழி
பார்மேல்மற்றன்ப ரடிவாழிநம்நடேச
பக்தஜன சபைவாழி வாழிபரனருளே.